REGD. No. TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone 812818 4 பக்கம் விலை 35 காசு




# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர

'வரலாறு

நாம் என்ன செய்து கொண்டிருக்கிறோம் என்ன செய்யப்போகிறோம் என்பதை நம்முடைய பல்லாயிரம் ஆண்டு வரலாறு பார்த்துக் கொண்டிருக்கிறது.

பண்டித நேரு



மலர்: 4 சென்னை 14-6-1980 சனி (★)❋●❋(✶) வெளியூர் 15—6—1980 ஞாயிறு இதழ் 216

## வேலைக்கு உணவு திட்டத்தை மீண்டும் துரிதப்படுத்த

# புரட்சித்தலைவர் தீவிரம்

## அதிக அளவு அரிசி ஒதுக்கீடு

கடலூர், ஜூன் 14-ஏழை-எளிய மக்கள் பலன் பெற வேலைகரு உணவு வழங்கும் திட்டத்தை மீண்டும் தீவிரமாகச் செயல்படுத்த முதல்வர் புரட்சித் தலைவர் உத்தரவிட்டுள்ளார். தென் ஆற்காடு மாவட்டத்துக்கு மட்டும் ஆயிரம் டன் அரிசியை அரசு ஒதுக்கியுள்ளது.



"வேலைக்கு உணவு திட்டம் ஜனாதிபதி ஆட்சி காலத்தில் நிறைவேற்றப் படாமல் இருந்தது.

கிராமப்புறங்களில் உள்ள ஏழை எளிய மக்கள் பலன் பெறுவதற்காக இத் திட்டத்தை தீவிரமாகச் செயல்படுத்தும்படி புரட்சித்தலைவர் உத்தரவிட்டுள்ளார்.

அதன்படி இதனைத் துரிதமாகச் செயல்படுத்தும் பணியில் மாவட்ட ஆட்சித்தலைவர்கள் ஈடுபட்டுள்ளனர்.

ராஜகோபாலன் தெரிவித்தார்.

இத்திட்டத்தின்படி சாலை போடுதல், குளங்கள், கிணறுகள் ஆகியவை தூர் எடுத்தல், வாய்க்கால் வெட்டுதல் போன்ற பல்வேறு பணிகளில் ஈடுபடுத்தப்படும் வேலையில்லா தொழிலாளர்களுக்கு கூலியாக அரிசி முக்கால்பங்கும் கால் பங்கு கைச்செலவுக்கு பணமாகவும் கொடுக்கப்படும்.

கூரை வீடுகளுக்கு ஒரு மின்விளக்கு வழங்கும் திட்டமும் தற்போது தென் ஆற்காடு மாவட்டத்தில் தீவிரமாக செயல்படுத்தப்பட்டு வருகின்றது.

### ஆயிரம் டன் அரிசி

தென் ஆற்காடு மாவட்டத்துக்கு மட்டும் இத் திட்டத்தின்படி ஏழை எளிய மக்களுக்கு வழங்க ஆயிரம் டன் அரிசி ஒதுக்கப்பட்டுள்ளது என்று மாவட்ட கலெக்டர் என்

## சேத்துப்பட்டு மர்ம கொலை: ஆசாமி கைது

சென்னை, ஜூன் 14-சேத்துப்பட்டில் 12-10-79ல் ராஜலட்சுமி என்ற 65 வயது மூதாட்டி படுகொலை செய்யப்பட்டது சம்பந்தமாக சீனிவாசன் என்ற நபரை தாம்பரத்தில் போலீசார் இன்று காலை கைது செய்தனர்.

ராஜலட்சுமியின் வீடு சேத்துப்பட்டு வனிதா அவின்யூவில் உள்ளது. சம்பவத்தன்று இரவு வீட்டு ஜன்னலை அறுத்து ராஜலட்சுமியை கொலைசெய்துவிட்டு, அவர் அணிந்திருந்த 35 பவுன் நகைகள் மற்றும் வைர நகைகளை அவர் திருடிச் சென்றுவிட்டதாக கூறப்படுகிறது. திருடிய நகையை விற்ற மார்வாடிக் கடைக்கு சீனிவாசன் அடிதம் எழுதியதாகவும் அதைவைத்து போலீசார் அவரை கைது செய்துள்ளதாகவும் தெரிகிறது.

குற்றபிரிவு துணை கமிஷனர் ரமணன் உத்தரவின் பேரில் உதவி கமிஷனர் ஸ்ரீராமுலு, இன்ஸ்பெக்டர் ஜேம்ஸ்ராஜா ஆகியோர் தீவிரமாகப் புலன் விசாரணை செய்து சீனிவாசனை கைது செய்துள்ளனர். சீனிவாசனுக்கு மூன்று மனைவி. இவர்ஏற்கனவே பல திருட்டு வழக்குகளில் சம்பந்தப்பட்டவர் என்று கூறப்படுகிறது.

## கழக அரசுக்கு ஒத்துழைப்பு நல்க டெல்லிக்கு கம்யூ. வேண்டுகோள்

சென்னை, ஜூன். 14-மத்திய அரசு தமிழகத்தில் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள கழக அரசுக்கு முழு ஒத்துழைப்பை நல்க வேண்டுமென்று இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநில நிர்வாகக் குழு கேட்டுக்கொண்டு தீர்மானம் நிறைவேற்றியுள்ளது.

போராட்டத்தின்போது வேலை இழந்தவர்களுக்கு வேலை வாய்ப்பும் வழக்குகளில் ஈடுபடுத்தப்பட்டோர் வழக்குகள் வாபஸ் வாங்கவும் புரட்சித்தலைவர் அமைச்சரவை எடுத்துள்ளமுடிவிற்குபாராட்டு தெரிவித்துள்ளனர்.

காவல் துறையினர் போராட்டத்தின் போது வேலை இழந்தவர்களுக்கு வேலைவாய்ப்பு, வழக்குகளில் ஈடுபடுத்தப்பட் வழக்குகளை வாபஸ் வாங்கவும் அனைத்திந்திய தி மு க அமைச்சரவை செய்துள்ள முடிவை இந்திய கம்யூனிஸ்ட் கட்சி தமிழ் மாநில நிர்வாகக் குழு வரவேற்கிறது.

காவல் துறையினரின் குறைகளைப் போக்க தொடர்ந்து நடவடிக்கைகளை மேற்கொள்ளவும் சங்கத்திற்குஅங்கீகாரம்அளிக்கவும் காவல்துறையின் அணுகு முறை பொதுமக்களின்பால் மாற்றம் அடையவும் தகுந்த முயற்சிகளை தமிழக அரசு எடுக்க வேண்டுமென கேட்டுக் கொள்கிறோம்.

இவ்வாறு இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநிலக்குழுவின் செயலாளர் ப.மாணிக்கம் விடுத்துள்ள அறிக்கையில் தெரிவித்துள்ளார்.

நேற்றும் அதற்கு முன் தினமும் நடந்தகம்யூனிஸ்ட் கட்சியின் நிர்வாகக் குழுக் கூட்டத்தில்நிறைவேற்றிய அரசியல் தீர்மானம் வருமாறு:

மத்திய அரசால் கலைக்கப்பட்ட தமிழக சட்டமன்றத்திற்கு நடந்த தேர்தலில் தமிழக மக்கள் தந்த தீர்ப்பிற்கு இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநில நிர்வாகக் குழு தனது பாராட்டுதலை தமிழக மக்களுக்குத் தெரிவித்துக்

(2-ம் பக்கம் பார்க்க)

## தமிழகத்தில்மின்சார நிலை: முதல்வர்புரட்சித்தலைவர்-பண்ருட்டி விளக்கம்

சென்னை, ஜூன் 14-தமிழகத்தில் மின்சார நிலை பற்றி முதல்வர் புரட்சித்தலைவரும், பண்ருட்டி ராமச்சந்திரனும் நேற்று நிருபர்களிடம் விளக்கினர்.

நேற்று நடந்த நிருபர்கள் கூட்டத்தில் மின்சார நிலைபற்றி கேட்கப்பட்ட கேள்விகளுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் அளித்த பதில் விவரம் வருமாறு:

நிருபர்: தமிழ்நாட்டில் "பவர்" நிலை எப்படி இருக்கிறது.

முதல்வர்: எந்த 'பவர்'?

நிருபர்: மின்சார நிலை..

முதல்வர்: மின்சார வெட்டு தளர்த்தப்படக் கூடிய நிலை இருக்கிறது.

நெய்வேலி மின்சார உற்பத்தியில் அபிவிருத்தி ஏற்பட்டு இருக்கிறது.

அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன்: தமிழகத்திற்கு தினமும் 4 கோடி யூனிட் மின்சாரம் தேவைப்படுகிறது.

இதில் 2கோடி 80லட்சம் யூனிட்டின் சாரம்தான் இங்கே கிடைக்கிறது. மீதி 120 லட்சம் யூனிட் பற்றுக்குறை. அதாவது30 சதவிகித பற்றுக்குறை இருக்கிறது.

இதில் 6 லட்சம் யூனிட்டைத்தான் கேரளத்தில் இருந்து பெற்று வந்தோம்.

தென்மேற்கு பருவமழை எந்த அளவுக்கு உதவி செய்கிறது என்பதைப் பார்க்கவேண்டும்.

இதையும் கவனித்து இன்னும் இரண்டு வாரங்களில்மின்சார நிலைபற்றி முடிவு எடுக்கப்படும்.

## கருணாநிதி மீதுவழக்கு: நெல்லை ஜெபமணி அறிவிப்பு

சென்னை, ஜூன் 14-சட்டசபைத் தேர்தலில் போட்டியிட்ட கருணாநிதி தேர்தலின் போது முறைகேடுகள் பலவற்றைசெய்ததாகவழக்கு தொடர இருப்பதாக அண்ணாநகர் தொகுதியில் போட்டியிட்ட நெல்லை ஜெபமணி அறிவித்தார்.

ஏராளமான கார், லாரிகளை அமர்த்தி குறிப்பிட்ட தொகைக்கு மேல் கருணாநிதி அதிகமாகச் செலவு செய்ததாக அமைந்தகரை பெருமாள் கோவில் தெருவில் நடந்த கூட்டத்தில் பேசுகையில் அவர் அறிவித்தார்.

## நெசவாளருக்கு வீடு: கழகஅரசுபுதியதிட்டம்!

சென்னை, ஜூன் 14-நெசவாளர்களுக்கு வீடுகட்டித்தர புரட்சித்தலைவர் அரசு தீவிர திட்டம் தீட்டியுள்ளது என்று கைத்தறித்துறை அமைச்சர் எஸ் என் ராஜேந்திரன் கூறினார்.

### முதல்வருக்கு பாராட்டு

சென்னை, ஜூன்14 முதல்வர் புரட்சித்தலைவருக்கும் அமைச்சர்களுக்கும் தமிழ்நாடு அரசு ஊராட்சி ஒன்றிய ஊரக மருத்துவ அலுவலர்கழகத்தின் சார்பில் அதன் தலைவர் டி. கிருஷ்ணமூர்த்தி மாலைகள் அணிவித்து பாராட்டையும் வாழ்த்துக்களையும் தெரிவித்தார்.

கைத்தறித்துறை அமைச்சர் எஸ் என் ராஜேந்திரன் இன்று நிருபர்களுக்கு அளித்த பேட்டியில் கூறியதாவது:

விவசாயிகள் பிரச்சினைக்கு முன்னுரிமை கொடுத்து தீர்ப்பது போலவே புரட்சித்தலைவர் அரசு நெசவாளர் பிரச்சினைகளையும் உடனடியாககவனித்துஆவனசெய்யும். இடைத் தரகர்கள் ஆகியோர் நெசவாளர்கள் பிரச்னையை தீர்க்க விடாமல் தடுப்பதை அனுமதிக்க மாட்டோம்.

நெசவாளர்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த 8அம்சதிட்டத்தை நிறைவேற்ற உள்ளோம்.

கைத்தறித்துறையில்கூட்டுறவின் சேவையை அதிகரித்தல், நலிவுற்ற கூட்டுறவு சங்கங்களுக்கு நிதி உதவி அளித்தல், ஏற்றுமதி வாய்ப்புகளைப் பெருக்குதல், நெசவாளர்களுக்குச் சேமிப்பு மற்றும் பாதுகாப்புக்கான திட்டம் நெசவாளர்களுக்கு வீடு கட்டித் தரும் திட்டம் ஆகியவை இதில் அடங்கும்.

### அரசு மானியம்

வீடு கட்டித் தரும் திட்டத்தின்படி மாநில அரசே ஆயிரம் ரூபாயை நெசவாளர்களுக்கு மானியமாக அளிக்கும். 4 ஆயிரம் ரூபாயை வீட்டு வசதி மற்றும் ஊரக வளர்ச்சி கார்ப்பரேசன் கடனாக வழங்கும்.

ஆக ரூ 5 ஆயிரம் செலவில் ஒவ்வொரு வீடும் கட்டி முடிக்கப்படும்.

1980.81ஆம் ஆண்டில் இவ்வாறு 1650 வீடுகள் கட்டித்தரப்படும்.

1980-81ம் ஆண்டில் கைத்தறித்துறையில்சுமார் ரூ. 300 கோடிக்கான கைத்தறித்துணி உற்பத்தி செய்யப்படும். கோ-ஆப்டெக்ஸ் மூலம் 1980-81-ல் ரூ. 380 கோடிக்கான துணிவிற்கப்படும் என மதிப்பிட்டுள்ளது.

சில்க்ஸ்டர் என்ற புதிய ரகபட்டுத்துணி புதிதாக விற்பனைக்குக் கொண்டு வரப்படும்.

இவ்வாறு அமைச்சர் எஸ். என். ராஜேந்திரன் கூறினர்.





தி மு க விலிருந்து விலகி முதல்வர் புரட்சித்தலைவருக்கு மாலை அணிவித்து கழகத்தில் சேர்ந்த போது எடுத்தப் படம்.

## புரட்சித்தலைவர் அன்பு வேண்டுகோள்

என் ரத்தத்தின் ரத்தமான உடன்பிறப்புகளுக்கு,

எனக்கு மாலை அணிவித்து வாழ்த்திட வேண்டுமென்று நாள்தோறும் கழகத் தோழர்கள் வெளியூர்களிலிருந்தும், சென்னை நகரில் பல வட்டங்களிலிருந்தும் வந்துகொண்டிருக்கிறீர்கள்.

தொலைதூரத்திலிருந்து பல சிரமங்களுக்கிடையில் வந்து மாலை அணிவித்தால்தான் உங்கள் வாழ்த்து எனக்குக் கிடைத்தது என்று பொருளல்ல. என்னை வாழ்த்த வேண்டுமென்று நீங்கள் இருக்கும் இடத்திலிருந்து மனதார நினைத்தாலே போதும்.

உங்களுடைய அன்பு வாழ்த்துக்கள் என்னைச் சுற்றிப் பாதுகாப்பு அரண்களாக அமையும் என்பது நிச்சயம்.

எனவே எனக்குமாலை அணிவிக்கவிரும்புகிறவர்கள் என்னை உங்களுடைய அன்புக்குப் பாத்திரமாக்கிய அமரர் அண்ணாவின் திருஉருவப் படங்களுக்கு அணிவித்தால் அதுவே எனக்குச் செய்கின்ற மிகப் பெரிய பாராட்டுதல்களாகும்.

எனவே எனது உடன்பிறப்புக்களை தினமும் சந்திப்பதற்கு நேரம் ஒதுக்கி இடத்தையும்குறிப்பிட்டு விரைவில் வெளியிட இருக்கிற அறிக்கை வரும்வரையில் இப்படிப்பட்ட சிரமங்களுக்கு ஆளாக்கிக் கொள்ளவேண்டாம் என பணிவுடன் கேட்டுக் கொள்கிறேன்.

அன்பன்,

எம். ஜி. ஆர்

## அமைச்சர் கோமதி நிகழ்ச்சிகள்

ஜூன் 15-ந் தேதி காலை தஞ்சை, 11மணி மாவட்ட சமூகநலத்துறை அதிகாரிகளுடனகலந்துரையாடல், மாலை 5 மணி தஞ்சை பொதுமக்கள் வரவேற்பு இரவு 7 மணி தஞ்சை மாவட்ட வாக்காளர் நன்றியறிவிப்பு கூட்டம்

16-ந் தேதி காலை வலங்கைமான், வாக்காளர்களுக்கு நன்றி அறிவிப்பு 17-ந் தேதி மாலை 5 மணி அம்மாப்பேட்டை வாக்காளர்களுக்கு நன்றி அறிவிப்பு

# குவியுது காண் தேர்தல் நிதி

## நிதி வழங்கியோர் பட்டியல்

திரு. டி. நாராயணன், கோ-ஆப் நியூ ஆனந்த் பவன், கேவாசிபடேல் தெரு, பம்பாய் அவர்கள் மூலம் வந்த நிதி.

| | |
|---|---|
| டி. நாராயணன் | 13-00 |
| பி. ஆல்பர்ட் | 11-00 |
| ஆர். எஸ். மணி ஐயர் | 11-00 |
| கே. தர்மராஜ் | 11-00 |
| வி. பி. பாயாஸ் | 11-00 |
| ஆர். ராஜன் | 5-00 |
| ஜி. கணேசன் | 5-00 |
| ஜி. ஜோசப் | 5-00 |
| ஜி. நாராயணன் | 2-00 |
| டி. வேலன் (தினத்தந்தி விற்பனையாளர்) | 2-00 |
| எஸ். ராஜன் | 2-00 |
| என். கிருஷ்ணன், எஸ்.பி.ஐ. | 11-00 |
| பி. எம். சாலி | 5-00 |
| எஸ். பெருமாள் | 5-00 |
| எஸ். முத்து (தினகரன் விற்பனையாளர்) | 2-00 |
| வி ஹரிதாஸ், 235 லிங்கிசெட்டித்தெரு சென்னை-1 | 501-00 |
| இரா நந்தகோபால், 6வது வார்டு அம்மப்பாளர், வெள்ளக்கோயில் | 10-00 |
| என் எஸ் நடராஜன், 2அசோக்லாட்ஜ், பி எம் ரோடு அசன்-573 201, கர்நாடகா மாநிலம் | 172-00 |
| என் ரவீந்திரன், மேடம்ஹவுஸ், எடப்பள்ளி கொச்சின் | 25-00 |
| இரா து மூர்த்தி, மெயின்ரோடு, நெய்வேலி-2 | 17-00 |
| வே பொன்னையா, வெல்டர், ஈங்கர், பெரியார் | 11-00 |
| எஸ் சங்கர நாராயணன், உடியாபேட்பெங்களூர் | 10-00 |
| வி ராஜா, நாகை, தஞ்சை | 10-00 |
| இரா ஆண்டிச்சாமி, மாங்குளம், மதுரை | 10-00 |
| டி ஏ நாசர்அலி, தராவி, பாம்பே-17 | 10-00 |
| வை கலியபெருமாள், சி ஐ டி நகர், சென்னை 35 | 5-00 |
| அனகாபுத்தூர், சி இராமலிங்கம், எம் எல் சி, அவர்களிடம் அளித்தநிதி | 20-00 |

ஜி. நடேசன், ஜி, டி, ஆர், இ. பெங்களூர்-75 அவர்கள் மூலம் வந்த நிதி விவரம்.

| | |
|---|---|
| ஜி. நடராசன் | 10-00 |
| சண்முகசுந்தரம் | 10-00 |
| செல்வம் | 10-00 |
| தங்கராஜ் | 10-00 |
| விஜயகுமார் | 10-00 |
| டி. பி. சுகுமாரன் | 5-00 |
| எல். பி. பாண்டியன், புளியங்குடி, மெயின்ரோடு. தபால் எண்: 677 855 | 51-00 |

கே. எஸ். தியாகராஜன் 2 மல்பாளையன் ரோடு கருங்கல்பாளையம்-3 ஈரோடு அவர்கள் மூலம் வந்த நிதி:

| | |
|---|---|
| எஸ். பி. டி. செல்வம் | 10-00 |
| கே. எஸ். தியாகராசன் | 5-00 |
| என். மாரிமுத்து | 5-00 |
| எஸ். வேலாயுதம் | 5-00 |
| ஜி. சீனிவாசன் | 5-00 |
| டி. மாணிக்கம் | 5-00 |
| டி. விஜயன் | 5-00 |

எஸ். ராமசாமி, சாரதாம்பாள் தெரு, சைதை அவர்கள் மூலம் வந்த நிதி:

| | |
|---|---|
| எஸ் ராமசாமி | 10 00 |
| டி தேவேந்திரன் | 5-00 |
| ஆர் குருநாதன், 76 பவானி ரோடு, அசோகபுரம், ஈரோடு-5. | 10-00 |
| ஆர். சிவசண்முகம், மேட்டுப்பாளையம், கோவை | 5-00 |
| டி. ஜெகநாதன், சீனிவாசபெருமாள் கோயில் தெரு, சென்னை-19 | 5-00 |
| பி சண்முகம் வால்பாறை, பொள்ளாச்சி, கோவை | 5-00 |
| ஆர் கோபிநாத், சென்னை-2 | 20-00 |
| என் சங்கர் பி ஏ, காளிபாளன் புதுத் தெரு, நாகர் கோவில், குமரி மாவட்டம். | 20-00 |
| ஆர். வி. ராஜா, புரட்சித்தலைவர் எம். ஜி. ஆர். அறிவு வளர்ச்சி மன்றத்தலைவர், 107-வது வட்டம், சென்னை-34 | 5-00 |
| அனகாபுத்தூர் சி. இராமலிங்கம் எம். எல். சி. அவர்களிடம் அளித்த நிதி | 10 00 |
| எம். பி. முனியப்பன் ஜென்டோ ஓர்க்ஸ், என்.எஸ். கார்டன் சிவாஜி டாக்கீஸ், ஜெ. சி. டபிள்யு. ரோடு, பெங்களூர் | 85 00 |
| எம். கண்ணன், 17வது வார்டு, வாண்டிப் பேட்டை, புதுவை-1 | 20-00 |

சந்திரமௌளி 66 மூர்த்தி தெரு, பழைய காமளம் சென்னை-33 அவர்கள் மூலம் வரவு

| | |
|---|---|
| மௌளி | 5-00 |
| கே. சுந்தரேசன் | 5 00 |
| ஆர். ரங்கசாமி | 5-00 |

என். சங்கர், டி.பி. தெரு, குத்தஅள்ளி அரண்மனை, பெங்களூர்-3 அவர்கள் மூலம் வந்த நிதி விவரம்:

| | |
|---|---|
| என். சங்கர் | 10 00 |
| பி. கோவிந்தன் | 20-00 |
| டி. கணேஷ் | 10-00 |
| எல். கணேஷ் | 10-00 |
| வடிவேல் | 10-00 |
| கங்காதரன் | 5-00 |
| மணி | 10-00 |
| முத்து | 5-00 |
| ராஜி | 5-00 |
| எஸ், ராஜா, துணைச்செயலாளர், எம். ஜி. ஆர். மன்றம், தராவி, பாம்பே-17. | 11-00 |
| கே, இ. கருணாநிதி, செயலாளர், எம். ஜி. ஆர். மன்றம், தராவி, பாம்பே-17. | 11-00 |
| பி பரமசிவக் கவுண்டர், தெற்குவீதி, உடுமலை, கோவை | 10-00 |

திருமிகு புரட்சித்தலைவர் அவர்களிடம் திண்டிவனம், பொதுக்கூட்டத்தில் அளித்தநிதி விவரம்:

| | |
|---|---|
| தந்தை பெரியார் போக்குவரத்துக் கழகம், அண்ணாதொழிலாளர்சங்கம், திண்டிவனம், பணிமனை (தலைவர், ஏ. ஆசீர்வாதர் அவர்கள்) | 51-00 |
| தந்தை பெரியார் போக்குவரத்துக்கழகம் அண்ணா தொழிலாளர் சங்கம், திண்டிவனம் பணிமனை செயலாளர் மா ஜெகதீசன் | 51-00 |
| எம். சுப்ரமணியம், கண்டக்டர், த.பெ.போ.கழகம திண்டிவனம் | 10-05 |
| கழகத்தோழர்கள் அளித்தநிதி | 539-95 |
| அனகாபுத்தூர்.சி.ராமலிங்கம்,எம்.எல்.சி. அவர்களிடம் நேரு தெரு,அனகாபுத்தூரில் அளித்தநிதி | 100-00 |
| வி.கே. பாலன், அம்பேத்கார் நகர், திண்டிவனம் | 11-00 |
| ரா, கருணாநிதி, 21 பந்தர்தெரு சென்னை 1. | 2-00 |
| குலசேகரதாஸ், வானூர் தென்ஆற்காடு | 5-00 |
| காளிதாஸ், வானூர், தென் ஆற்காடு. | 2-00 |
| கே. ஜெகாமணி, வானூர், தென் ஆற்காடு | 1-00 |
| வி.செங்குட்டுவன், 21 பந்தர்தெரு. சென்னை 1 | 1-00 |

எஸ். ராமச்சந்திரன்
பொருளாளர்
அனைத்திந்திய அண்ணா தி. மு. க.

# புரட்சித்தலைவர் வாழ்க!

:-கவிஞர் செந்தமிழ்மாறன்-:

வானத்தை வில்லாக்கித் தருவோம் என்று
வாக்குறுதி தாராமல் ஏழ்மை என்னும்
ஈனத்தைப் போக்குதற்குத் திட்டம் தந்தோம்!
இமயத்திற் கீடான வெற்றி கண்டோம்!
ஞானத்தை அடக்கத்திற் கடகு வைத்த
நல்லதொரு தலைவருக்குத் தொண்டர் என்னும்
கானத்தை இசைத் தமிழில் முழக்கம் செய்வோம்!
கழகத்தை உலகிற்கு விளக்கம் செய்வோம்!
உலகறிந்த ஊழலுக்குச் சொந்தக் காரர்
ஓரணியில் நின்றார்கள்! ஏழை மக்கள்
உளமறிந்த நம்புரட்சித் தலைவர் பின்னால்
உழைக்கின்ற தொழிலாளர் துணை நின்றார்கள்!
கொலைபுரிந்தும் பதவிசுகம் காண்பதற்கு
குதித்தெழுந்து கலைஞர்படை வந்த தென்ற
நிலையறிந்தோம்! "இரட்டைஇலை" சின்னம்கண்டோம்
நீங்காத வெற்றியினை நேரில் கண்டோம்!
இமயத்தை வென்ற வரை! ஏழை மக்கள்
இதயத்தில் குடியிருக்கும் தென்றல் காற்றை!
குமுதமலர்க் குள்ளிருக்கும் மகரந்தத்தை!
கொல்லிமலைப் பூந்தேனை! மீண்டும் எங்கள்
இமைக்குள்ளே வைப்பதுபோல் முதல்வராக்கி!
இனிய திருச்சபை நடுவில் அமர வைத்தோம்!
சமுத்திரம் போல் ஆட்சி அலை புரிந்து மக்கள்!
தரித்திரத்தைப் போக்கிடவே வாழ்த்துகின்றோம்!

# புரட்சித்தலைவர் வரவேற்பு....

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

தெரியவில்லை.

புதிய அரசியல் நிர்ணய சபை அமைக்கப்பட வேண்டும் என்று பேரறிஞர் அண்ணாவும் முன்பே கோரி இருக்கிறார்.

தமிழகத்தில் எங்கள் அணியில் இருக்கும் கட்சிகளின் எண்ணிக்கைக்கு ஏற்ப அரசியல் நிர்ணய சபையில் இடம் என்பதை ஏற்கமுடியாது.

இந்திய துணைக்கண்டத்தில் உள்ள அரசியல் கட்சிப் பிரதிநிதிகள், அறிவுமிக்கவர்கள் சான்றோர்கள் அடங்கிய அவையாக இருக்கவேண்டும்.

அனைத்துமக்களின் பிரதிநிதிகளும் இடம்பெற்று இருக்கவேண்டும் ஒவ்வொரு பிரிவினருக்கும் பிரதிநிதி இருக்க வேண்டும் இது என்னுடைய தனிப்பட்ட கருத்து.

## டெல்லிக்கு கம்யூனிஸ்ட் வேண்டுகோள்..

(முதல் பக்கத் தொடர்ச்சி)

கொள்கிறது.

மத்திய அரசு மாநில அரசுகளைக் கலைத்ததற்கு தமிழக வாக்காளர்கள் கொடுத்துள்ள பதில் மத்திய அரசின் நிலையை மறு பரிசீலனை செய்ய உதவும் என நம்புகிறோம்.

மத்திய அரசு புதிய மாநில அரசுக்கு தனது ஒத்துழைப்பை நல்கவேண்டுமென்றும் கேட்டுக் கொள்கிறது.

இந்திராகாங்கிரஸ்திமுக கூட்டணி மாநில அதிகாரத்தைப் பெறுவதற்கு மிக கடுமையான முயற்சிகளை மேற்கொண்டு பண பலம், பிரச்சார பலம், சமூகத்தில் ஆதிக்கம் வகிக்கும் சக்திகளின் பலம் ஆகியவற்றை திரட்டி ஈடுபடுத்தியது.

பல இடங்களில் வன்முறையும் பயன்படுத்தப்பட்டது.

இத்தகைய சக்திகளையும் மீறி அனைத்திந்திய அண்ணா திமு கழகத்தையும், அதன் தோழமைக் கட்சிகளையும் மக்கள் பெரிய அளவில் தேர்ந்தெடுத்தது ஜனநாயக உணர்வின் வளமையை எடுத்துக் காட்டுகிறது. இந்தத் தேர்தல் போராட்டத்தில் ஈடுபட்டு கடும் உழைப்பினையும் ஈந்துள்ளவர்களுக்கு நன்றியையும் வன்முறையினால் சிலர் உயிரிழந்தவர்களுக்கு நிர்வாகக்குழு இரங்கலையும் தெரிவித்துக் கொள்கிறது.

கழக அரசு எடுக்கும் ஆக்கபூர்வமான நடவடிக்கைகளுக்கு கம்யூனிஸ்ட்கட்சி தனது முழு ஒத்துழைப்பைத் தரும்,

சட்டமன்றத்தில் ஆக்கப்பூர்வமான எதிர்க்கட்சியாகச் செயல்படும். தோழமைக் கட்சிகளோடு ஏற்பட்ட உறவைப் பலப்படுத்தி வளர்த்து மக்கள் நல்வாழ்விற்கு பாடுபட தொடர்ந்து செயல்படும் இவ்வாறு தீர்மானம் நிறைவேற்றப்பட்டுள்ளது

## ஓட்டேரி

15 6 80 ஞாயிறு காலை 10 மணிக்கு கொடியேற்று விழா 68-வது வட்டம் வள்ளுவப்பண்டாரத்தெருவில் ம. சண்முகம் தலைமையில் சி. ராமலிங்கம் எம் எல் ஏ கொடியேற்றுவார். எஸ் ஜெகத்ரட்சகன் எம். எல். ஏ., புருஷோத்தமன், சி பழனி, டி ஜெ ராமன், தம்பிதுரை, பா. மணியன் ஆகியோர் கலந்துகொள்வார்கள்.

## விவசாயிகள் கடன் பிரச்னை

கேள்வி:- விவசாயிகள் கடன் எப்போது தீர்க்கப்படும்?

முதல்வர்: தேர்தல் அறிக்கையில் இதைப்பற்றி தெளிவாகச் சொல்லி இருக்கிறோம். அது தான் எங்களைக் கட்டுப்படுத்தும் விவசாயிகள் கடனைதீர்க்க முதலிடம் தந்து செயல்படுவோம்.

தி.மு.க.வும், இந்திரா காங்கிரசும் வெளியிட்டுள்ள கூட்டு அறிக்கையில் விவசாயிகள் கடன்பற்றி நிவாரணம் அளிப்போம் என்றுதான்கூறியிருக்கிறார்கள்.

ஆனால் நாங்கள் கடனைத் திருப்பித்தர முடியாத நிலையில் இருக்கும் ஏழை விவசாயிகள் கடனை 5ஆண்டுக்குள் மத்திய அரசிடம் வலியுறுத்தி ரத்து செய்ய முயற்சிகளை மேற்கொள்வோம். மத்திய அரசு இதை ஏற்காவிட்டால் தமிழக அரசே அந்தக் கடனை ஏற்கும் என்று சொல்லி இருக்கிறோம்.

## மதுவிலக்கு பர்மிட் தொடரும்

நிருபர்:- மதுவிலக்கை ரத்துசெய்யவேண்டும் என்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கோரிஇருக்கிறதே?

முதல்வர்:- அது அவர்கள் கொள்கை.

நிருபர்:- ரூ.25 பர்மிட் தொடருமா? சில இடங்களில் அதிகாரிகள் பர்மிட் தராமல் நிறுத்தி இருக்கிறார்களே?

முதல்வர்: இந்த திட்டத்தையே நாங்கள் தான் அறிவித்தோம். இதில்எப்படி சந்தேகம்வர முடியும்? சந்தேகப்படுவது தவறு. ரூ 25 பர்மிட் முறை தொடரும். இவ்வாறு புரட்சித்தலைவர் கூறினார்

Published by K. Ravindran on behalf of Thangamani publications, 275, Avvai Shanmugam salai, Madras 14 and printed by him at print House, 1. First Main Road, United India Colony. Madras-24.
Editor: E.PARASURAMAN



## புரட்சித் தலைவருக்கு அச்சக மேற்பார்வையாளர் சங்கம் பாராட்டு

சென்னை, ஜூன் 14-மகத்தான வெற்றிபெற்று மீண்டும் தமிழக முதல்வராக பொறுப்பேற்ற முதல்வர் புரட்சித் தலைவருக்கும், அமைச்சர்களுக்கும் தமிழ்நாடு அரசு அச்சகங்கள் மேற்பார்வையாளர்கள் சங்கம் வாழ்த்துக்களையும் பாராட்டுக்களையும் தெரிவித்துள்ளது.

மதுரை ஆசிரியர் முன்னேற்ற கழகம்

## புரட்சித் தலைவருக்கு நல்வாழ்த்து

மதுரை, ஜூன் 14-மதுரை தமிழாசிரியர் முன்னேற்றக்கழக ஆட்சி மன்றக் கூட்டம் தலைவர் வரதராசன் தலைமையில் நடைபெற்றது.

கூட்டத்தில் தமிழக முதல்வர் புரட்சித் தலைவருக்கும் அவருடைய மந்திரி சபைக்கும் பாராட்டுதலையும், நல் வாழ்த்தையும் தெரிவித்துக்கொள்ளப்பட்டது.

நீலகிரி, கோவை வாக்காளர்களுக்கு

## இ.கம்யூனிஸ்டு நன்றி அறிவிப்பு

கோவை, ஜூன் 14-தமிழகத்தில் நடந்து முடிந்ததேர்தலில்கோவை நீலகிரி மாவட்டத்தில் இந்திய கம்யூனிஸ்ட் கட்சி சார்பாக போட்டியிட்டவேட்பாளர்களுக்கும், கழகஅணிசார்பாக போட்டியிட்ட வேட்பாளருக்கும்வாக்களித்த பொதுமக்களுக்கும் கோவை நீலகிரி மாவட்ட இந்திய கம்யூனிஸ்டு கட்சி சார்பாக நன்றி தெரிவித்து கொள்கிறேன் என்று மாவட்ட செயலாளர் வெங்கிடு தெரிவித்துள்ளார்.

புரட்சித்தலைவருக்கு

## ஆட்டோரிக்ஷா உழைப்பாளர் சங்கம் நன்றி

சென்னை, ஜூன் 14-புரட்சித்தலைவர் இரண்டாவது முறையாக மீண்டும் தமிழக முதல்வராகப் பதவி ஏற்றதற்கு தமிழ்நாடு ஆட்டோரிக்ஷா, உழைப்பாளர் சங்கம் இதயம்கனிந்த வாழ்த்துக்களை தெரிவித்து கொள்கிறது என்று அச்சங்கத்தலைவர்குபேந்திரன் தெரிவித்துள்ளார்.

## தொண்டையார் நகர்

தொண்டையார் நகர் அம்மன்கோவில் தெருவில் உள்ள எம் ஜி ஆர் நற்பணி மன்றத்தினர் புரட்சித்தலைவர்முதல்வராகப் பொறுப்பேற்றதை யொட்டிவிழா எடுத்தனர்.

டி. ஜேம்ஸ் சங்கர்தாஸ் தலைமையில், ஏ. தாஸ் முன்னிலையில் இந்தியகம்யூனிஸ்ட் கட்சியைச்சேர் நகர் பாண்டியன் 1000 பேருக்கு இனிப்பு வழங்கி உரையாற்றினர். எம். ராஜி, மீனவன் ஆகியோர் பேசினார்.

ஆனந்தன் நன்றி கூறினார்.

நாடாளுமன்றத்தில் அறிக்கை தாக்கல்

# பணவீக்கம் மேலும் கடுமையாக இருக்கும்: ஆர்.வி. அபாய அறிவிப்பு

புதுடெல்லி, ஜூன் 14-வருகிற ஆண்டில் பணவீக்கம் மேலும் கடுமையாக இருக்கும் என்று நாடாளுமன்றத்தில் நிதி அமைச்சர் ஆர். வெங்கட்ராமன் தாக்கல் செய்துள்ள சர்வே அறிக்கை அபாய அறிவிப்பு செய்துள்ளது.

1980-81ஆம் ஆண்டின் பொருளாதார சர்வே அறிக்கை நம் நாட்டின் பொருளாதாரம் பற்றிய உற்சாகமான சித்திரத்தை அளிக்கவில்லை.

பண வீக்கக் கட்டுப்பாடு முயற்சிகளுக்கு மிக மிக அதிக முன்னுரிமை அளித்தாக வேண்டும் என்று அறிக்கை வலியுறுத்துகிறது.

நடப்பு ஆண்டில் நிலவக்கூடிய பணவீக்க நிர்ப்பந்தங்கள், கடந்த ஆண்டில் காணப்பட்ட விலைஉயர்வுக்குப் பின்னணியாக இருந்த நிர்ப்பந்தங்களைவிட மிகவும்கடுமையாகவும் மாறுபட்டதாகவும் இருக்கும்.

1979-80 ஆம் வருடத்திய பணவீக்கத்தின் விளைவுகள் சர்க்கரை, வெல்லம் கண்டசாரி, எண்ணெய் வித்துக்கள் சமையல் எண்ணெய்கள் ஆகிய சில பண்டங்களின் விலை அதிகமாக உயர்ந்ததுடன் நின்று விட்டிருந்தது.

## விலை உயர்வு போக்கு..

ஆனால் எல்லாத் துறைகளிலும் விலைஉயர்வை ஊக்குவிக்கும் போக்கு இப்போது உருவாகி வருகிறது தொழிலுற்பத்திப்பண்டங்களின் விலையும் ஒரே சீராக உயர்ந்து வருகிறது.

குருட் ஆயில் பெட்ரோல் பண்டங்கள் ஆகியவற்றின் விலை உயர்வினால் பொருளாதாரத்தில் ஏற்படக்கூடிய விளைவுகளை நாம் இன்னமும் உணரத்தலைப்படவில்லை.

1980-81ல் பணவீக்கத்தைக் கட்டுப்படுத்த வேண்டுமெனில் தனிப்பட்ட பண்டங்களின் விலை உயர்வைக் கட்டுப்படுத்தினால் மட்டும் போதாது. இன்னும்விரிவான நடவடிக்கைகளை எடுத்தாக வேண்டியிருக்கும்.

உற்பத்தித் திறனை அதிகரிக்கக் கூடியதாகவும் அதே சமயத்தில் பண வருவாய் வளர்ச்சியைக் கட்டுப் படுத்தக்கூடியதாகவும் உள்ள கொள்கைகளை இணக்கமாக பின்பற்றி உற்பத்தி செலவு உயர்வை அதிகரிக்கக்கூடிய நிலைகளை கட்டுப் படுத்தவேண்டி இருக்கும்.

## நடவடிக்கைகள் என்ன?

பொது வினியோக அமைப்புக்கு விறுவிறுப்பு ஊட்டுதல், பற்றுக்குறை பட்ஜெட் முறையைக் கட்டுப்படுத்துதல்-வீண் விரயமான செலவுகளையும், உற்பத்திக்கு உதவாத செலவுகளையும் தவிர்த்தல் இன்னும் சிறந்த வரி நிர்வாகம் ஆகியவை பணவீக்கத்தைக் கட்டுப்படுத்துவதற்கான திட்டவட்டமான நடவடிக்கைகளாகும்.

எண்ணெய் விலை உயர்ந்து வருவது நமது பொருளாதாரத்தின் மீது பெரும் விளைவுகளை ஏற்படுத்தும். இந்தப் பிரச்னைகளைச் சமாளிக்கப் பல நடவடிக்கைகளை எடுக்க வேண்டியிருக்கும்.

இவ்வாறு நாடாளுமன்றத்தில் நிதிஅமைச்சர் ஆர்.வெங்கட்ராமன் தாக்கல் செய்த பொருளாதார சர்வே ஆய்வுஅறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ளது.

15-வது வட்டத்தில்

## 2000 பேருக்கு உணவுவழங்கினர்

முதல்வர் புரட்சித்தலைவர் பதவிப் பொறுப்பை ஏற்ற அன்று சென்னை 15-வது வட்டம் மணி கண்டமுதலித் தெருவில் இரண்டாயிரம் பேருக்கு உணவு வழங்கப்பட்டது.

இ மதுசூதனன் தலைமையில்ராயபுரம்பகுதிஅமைப்பாளர் ஏ தாஸ் வட்ட அமைப்பாளர் இரா து சந்தானம் ஆகியோர் முன்னிலையில் உணவு வழங்கினர்.

## திருவல்லிக்கேணி

15-6-80 ஞாயிறு காலை 9 மணிக்கு கோகுலம் காலனியில் (அவ்வை சண்முகம் சாலை) க. நடராசன் தலைமையில் அமைச்சர் பொன்னையன் கழகக் கொடியேற்றி வைத்து ஏழைகளுக்கு உணவு வழங்குகிறார்.

ஜே. பாலன், மு. கிருஷ்ணன், மு. இராஜேந்திரன், ப. கோபால், ஏ. தேவராஜன் ஆகியோர் கலந்துகொள்வார்கள்.

# பொது வாழ்வில் புகார் கூற முடியாத புரட்சித்தலைவர்

எளிமை மிகுந்தவராகவும், பொதுவாழ்வில் தூய்மை பொருந்தியவராகவும் ஊழல் புகாருக்கு இடமின்றியும் காமராஜரைப்போல்இருப்பவர் புரட்சித்தலைவர் என கல்கத்தாவில் இருந்து வெளிவரும் பிரபல ஆங்கிலப் பத்திரிகையான "பிசினஸ் ஸ்டாண்டர்டு" குறிப்பிட்டுள்ளது.

"பிசினஸ் ஸ்டாண்டர்டு" பத்திரிகையில் வெளிவந்துள்ள கட்டுரையில் தெரிவிக்கப்பட்டுள்ளதாவது:-

தமிழ்நாட்டில் திமுக இ காங்கிரஸ்ஆகிய கட்சிகளின் வலுவான கூட்டணியை எதிர்த்து போட்டியிட்டு எம் ஜி ஆர் மகத்தான வெற்றி பெற்றுள்ளார்.

எம் ஜி ஆருக்கு எதிராக சினிமா நடிகர் சிவாஜி கணேசனும் பிரச்சாரம் செய்தார்.

எம் ஜி ஆர் ஆட்சியில் விரைவாக முடிவுகள் எடுக்கப்படவில்லை என்றும் கூறப்பட்டது,

## காமராஜரைப் போல..

ஆனல் இத்தனைப் பிரசாரத்திற்குப் பிறகும் எம், ஜி. ஆர். வெற்றி பெற்றார்.

எம்.ஜி.ஆர், காமராஜரைப் போல எளிமையாகவும், நடைமுறைகளுக்கு ஏற்றபடியும், ஊழலற்ற முறையிலும் ஆட்சி நடத்தியதுஏழை எளிய மக்களை- குறிப்பாக கிராம மக்களை பெரிதும் கவர்ந்து அவரிடத்தில் மதிப்பை உண்டாக்கி உள்ளது.

ராஜாஜிக்குப் பிறகு, திரும்பவும் முதலமைச்சர் பதவிக்கு வந்தது எம்.ஜி. ஆர். தான் என்பது குறிப்பிடத்தக்கது ஆகும்.

## பொய்ப் புகார்

திமுகவில் தீவிர கட்சிப் பணியாற்றி வந்த எம் ஜி ஆரைப்பற்றி அண்ணு கூறுகையில், எம் ஜி ஆர் ஒரு பகுதியில் சுற்றுப்பயணம் செய்தால், தி.மு,க.விற்கு சில லட்சம் கூடுதல் ஒட்டுக்கள் கிடைக்கும்என்றார்.

தந்தை பெரியாரின் பகுத்தறிவு பிரச்சாரத்திலும் எம். ஜி. ஆர். தீவிரம் காட்டி வந்தார். திமுகவிலும் அவர் பொருளாளர் போன்ற முக்கிய பதவிகளை வகித்தார்.

சினிமாத்துறையிலும் எம் ஜி ஆர் தூய்மையானவராக இருந்தார். அவர் மது அருந்துவதோ, சிகரெட் புகைப்பதோ கிடையாது.

1977ல் கருணநிதி மந்திரி சபை ஊழல் புகாரை ஒட்டி டிஸ்மிஸ் செய்யப்பட்ட பிறகு. எம்.ஜி.ஆர். ஆட்சிப் பொறுப்பேற்றர்.

நடந்து முடிந்த சட்டசபைத் தேர்தலில் கருணநிதி எம்.ஜி. ஆரின் செல்வாக்கை குறைக்க வேண்டும் என்ற நோக்கத்துடன், அவர்மீது கப்பல்பேர ஊழல் என்றெல்லாம் குறிப்பிட்டார். ஆனல் இது மக்கள் மத்தியில் எடுபடவில்லை.

## ஏழைகள் ஏற்றனர்

எம் ஜி ஆர் மீதான ஊழல் புகார் குறித்து இந்திராகாந்தி கருணநிதி கூறியபடி விசாரணைக் கமிஷன் அமைக்காததோடு கருணநிதி மீது சர்க்காரியா கமிஷன் அறிக்கை அடிப்படையில் போடப்பட்ட வழக்குகளையும் வர்பஸ் பெறவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது.

மத்திய மாநில அரசுகளுக்கிடையே சுமுக உறவு நிலவ வேண்டும் என்றே எம். ஜி. ஆர் விரும்புகிறார் தேசிய கட்சிகளுக்கு ஈடாக அண்ணு திமுகவும் இத்தேர்தலில் அதிகஇடங்களில் போட்டியிட்டு மெஜாரிட்டி இடங்களில் வெற்றி பெற்றது.

எம்.ஜி. ஆருக்கு இடதுசாரி சக்திகளின் ஆதரவும் விவசாயிகளின் ஆதரவும் கிடைத்தது.

ஏழை எளிய மக்களும், நடுத்தர வர்க்க மக்களும் எம். ஜி. ஆரே ஆட்சிக்கு ஏற்றவர் என ஏற்றுக் கொண்டுள்ளனர்.

உட்கட்சிபூசல் நிறைந்த இந்திரா காங்கிரசையும் திமுகவையும் வாக்காளர்கள் அடியோடு புறக்கணித்து விட்டனர்,

இவ்வாறு 'பிசினஸ் ஸ்டாண்டர்டு' பத்திரிகையில் எழுதப்பட்டுள்ளது

The MGR phenomenon

[SEVEN] BUSINESS STANDARD SUNDAY 8 JUNE 1980

## நிதியமைச்சர் டாக்டர் நாவலர் நிகழ்ச்சிகள்

15-ந் தேதி காலை 8மணி நரசிங்க நல்லூர், 8-30 கருங்காடு, 9 மணி சுத்தமல்லி, 9-30 மணி கொண்டாநகரம், 10மணி பழவூர், 10-30 மணி கல்லூர், 11மணி சங்கதிரடு, 11-30 திருப்பணிகரிசல்குளம், மாலை 4மணி புதூர், 5மணி சீதப்பருத்தநல்லூர், 6மணி வெள்ளாளன்குளம், 6-30மணி துலுக்கர்குளம், இரவு 7மணி கண்டியப்பேரி, 8மணி ராமையன்பட்டி, 9மணி சேதுராயன்புதூர், 10 மணி தச்சநல்லூர்.

16-ந் தேதி காலை 9மணி கக்கன்நகர், 9-30 மணி திருவெண்ணுதபுரம், 10 மணி இழநத்தம், 10-30 மணி மணிப்படைவீடு, மாலை 5 மணி சேத்திமங்கலம், 5-30 மணி அருஜன்குளம், 6 மணி ராஜவல்லிபுரம், 6-30 மணி சங்கர்நகர், இரவு 7 மணி கரையிருப்பு, 7-30 மணி அழகநேரி, 8 மணி பேட்டை பொதுமக்கள் வரவேற்பு.

## புரட்சித் தலைவருக்கு டாக்டர் ரெக்ஸ் பாராட்டு

சென்னை, ஜூன் 14- கிறிஸ்துவ மதத்தை துச்சமாக மதித்து தூக்கி எறியப்பட்டுவிட்ட நிலையில் கிறிஸ்துவ சமுதாயத்தை மதித்துஎன்றும் மரியாதை தரும் எம் ஜி ஆர்அவர்கள் இன்று அரியணையில் தூக்கி நிறுத்தப்பட்டி, ருப்பது ஆண்டவன் கட்டளை எனவே சட்டமன்ற தேர்தலில் வெற்றி வாகை சூடிய புரட்சித் தலைவர் அவர்களை தமிழகத்தின் கிறிஸ்துவ ஜனநாயக சமுதாயம் சார்பில் வாழ்த்துகிறேம் என்று அந்தஇயக்கத்தின் தலைவர் டாக்டர் பி எம் ரெக்ஸ் அறிவித்துள்ளார்.

## மயிலைபகுதியில் கபாலி நன்றிஅறிவிப்பு

சென்னை. ஜூன் 14- மயிலைதொகுதிவாக்காளர்களுக்கு டி. கே கபாலி எம்.எல்.ஏ. வீதி வீதியாக சென்று நன்றி தெரிவிக்கிறர்.

இன்று சனிக்கிழமையன்று 136, 137, 135, 134, 133 வட்டங்களிலும் நாளை ஞாயிறு அன்று 127, 128, 129, 130, 131, 132 வட்டங்களிலும் வீதி வீதியாக சென்று நன்றி கூறுகிறர்.

டி. கே. கபாலி எம். எல். ஏ. வுடன் மயிலை தமிழ்மணி, மந்தைவெளி நடராசன், ராதாபாய், வட்ட அமைப்பாளர்கள், மகளிர் அமைப்பாளர்கள் சென்று நன்றி கூறுகிறர்கள்.

கருவூல கணக்குத் துறை கழகம்

## புரட்சித் தலைவருக்கு வாழ்த்து

சென்னை, ஜூன் 14- தமிழக முதல்வராக புரட்சித்தலைவர் பதவி ஏற்றதற்கு தமிழ்நாடு கருவூல கணக்குத்துறை அலுவலக கழகம் நன்றி தெரிவித்துள்ளது.

## தமிழ்நாடு பரிசுச்சீட்டு குலுக்கல் 20-ந் தேதி நடக்கிறது

சென்னை, ஜூன் 14- தமிழ்நாடு 34-வது பரிசுச்சீட்டு குலுக்கல் இந்த மாதம் 20-ந் தேதி காலை 10மணிக்கு ராஜாஜி மண்டபத்தில் நடக்கிறது.

எப். பி.எப்.சி. இரண்டு வரிசைகளுக்கான குலுக்கல் அன்று நடக்கிறது.

மந்தைவெளி அண்ணு தொழிலாளர் சங்கம்

## இனிப்பு வழங்கினர்

சென்னை, ஜூன் 14- புரட்சித்தலைவர் முதல்வராகப் பொறுப்பேற்றதையொட்டி மந்தைவெளி பணிமனை அண்ணு தொழிலாளர் சங்க சார்பாக கொடி ஏற்றி இனிப்புவழங்கினர்.

விழாவில் டி கே கபாலி எம் எல் ஏ கொடியேற்றி வைத்துப் பேசினர். சி தேவராசன் தலைமை வகித்தார், வெ தமிழ்மணி இனிப்பு வழங்கினர் எஸ் சடையப்பன், பி சுப்பையா, பழனிவேலு' ம க தாமோதரன், ஆகியோர் உரையாற்றினர் உஞ்சி நன்றி கூறினர்.

## முதல்வருக்கு சுகாதார ஆய்வாளர் பாராட்டு

சென்னை, ஜூன் 14 முதல்வர் பொறுப்பேற்ற புரட்சித்தலைவருக்கும் அமைச்சர்களுக்கும் தமிழ்நாடு சுகாதார ஆய்வாளர்கள் சங்கமாநில இணைச் செயலர்ள் கே. மணி வாழ்த்துக்களையும் பாராட்டுதல்களையும் தெரிவித்துள்ளார்.

புரட்சித் தலைவருக்கு

## காங்கிரஸ் அரிசனப் பிரிவு பாராட்டு

சென்னை, ஜூன் 14- தமிழக முதல்வராக மீண்டும் பொறுப்பேற்றுள்ள முதல்வர் புரட்சித்தலைவருக்கும் அவரது அமைச்சரவைக்கும் தமிழ்நாடு காங்கிரஸ் (அ) அரிசனப்பிரிவின் தலைவர் குபரமானந்தம் பாராட்டுகளையும் வாழ்த்துக்களையும் தெரிவித்துள்ளார்.

ஊராட்சி வளர்ச்சி பணியாளர்

## புரட்சித் தலைவருக்கு பாராட்டு

சென்னை, ஜூன் 14- நடந்து முடிந்த சட்ட சட்டமன்றத் தேர்தலில் அமோக வெற்றிபெற்று ஆட்சி அமைத்துள்ள புரட்சித் தலைவருக்கும், அவரது மந்திரிசபைக்கும் தமிழ்நாடு ஊராட்சி வளர்ச்சி அமைச்சுப் பணியாளர் சங்கத்தின் மாநில அமைப்பு நன்றிதெரிவித்து கொள்கிறது என்று மாநிலத்தலைவர் மயிலேரும் பெருமாள் தெரிவித்துள்ளார்.

## புரட்சித் தலைவருக்கு உழைப்பாளர் கட்சிபாராட்டு

சென்னை, ஜூன்-14 தமிழக முதல்வராக பதவி ஏற்ற புரட்சித்தலைவர் தமிழ்நாடு உழைப்பாளர் கட்சி தலைவர் முனுவேலு மாலை அணிவித்து பாராட்டினர்.

புரட்சித்தலைவருக்கு

## சலவையாளர் சங்கம்பாராட்டு

சென்னை, ஜூன் 14- தமிழக முதல்வராக மீண்டும் புரட்சித்தலைவர் வந்ததற்கு சைதை சலவையாளர் சங்கம் பாராட்டுதலை தெரிவித்துக் கொள்கிறது என்று சங்கத் தலைவர் பத்மநாபன்தெரிவித்தார்.

# தென் மாநிலங்களில் நாடாளுமன்றக் கூட்டம் நடத்த வேண்டுமென்ற புரட்சித்தலைவர் கோரிக்கை வெற்றி

# பெங்களூரில் நாடாளுமன்றக் கூட்டம்

# புரட்சிதலைவர்வரவேற்பு

சென்னை, ஜூன் 14- நாடாளுமன்றக் கூட்டத்தைத் தென் மாநிலங்களிலும் நடத்தவேண்டும் என்று நாம் கோரிக்கை விடுத்த போது கேலி செய்தார்கள். ஆனல் இப்போது பெங்களூரில் நாடாளுமன்றக் கூட்டத்தை நடத்த நடவடிக்கை எடுத்திருப்பது வரவேற்கத் தக்கது என்று முதல்வர் புரட்சித்தலைவர் கூறினா.

இந்த ஆண்டு பெங்களூரில் நாடாளுமன்ற கூட்டம் நடந்தால் அடுத்த ஆண்டு வேறு மாநிலத்தில் கூடுவதற்கு கேட்க முடியும் என்றும் புரட்சித்தலைவர் கூறினர்.

நேற்றுநடந்தநிருபர்கள் கூட்டத்தில் முதல்வர் புரட்சித் தலைவரிடம் பெங்களூரில் நாடாளுமன்றக் கூட்டம் நடத்தப்படஇருப்பது பற்றி கேட்கப்பட்டது

இதுகுறித்து முதல்வர் புரட்சித்தலைவரிடம் கேட்கப்பட்ட கேள்விகளும் அவர் அளித்த பதிலும் வருமாறு:-

நிருபர்.- நாடாளுமன்றக் கூட்டத்தை பெங்களூரில் நடத்த ஏற்பாடு செய்யப்படும் என்று அறிவிக்கப்பட்டு இருக்கிறதே அதுபற்றி உங்கள் கருத்து என்ன?

முதல்வர் : நாடாளுமன்றக் கூட்டத்தை தென்னகத்திலும் நடத்த வேண்டும் என்று நாம் முன்பேகேட்டுஇருந்தோம் அப்படி நாம் கேட்ட போது நம்மைக் கேலி செய்தார்கள்.

தென் மாநிலங்களில் நாடாளுமன்றக் கூட்டம் நடைபெற வேண்டும் என்று நாம் விடுத்த கோரிக்கை நிறைவேறுகிறது அந்தவகையில் நமது விருப்பம் நிறைவேறுகிறது ஆகவே அதை வரவேற்கிறேம்.

நிருபர்:- தமிழகத்தில் நடைபெறவேண்டும் என்று கோருவீர்களா?

முதல்வர்: இந்த ஆண்டு பெங்களூரில் நடக்கிறது என்பதை வரவேற்போம்.

அடுத்த ஆண்டு வேறு மாநிலங்களில் கூட வேண்டும் என்று கேட்கலாம் அதற்கானவாய்ப்பு இதன் மூலம் கிடைக்கும்.

## புதிய அரசியல் நிர்ணயசபை

கேள்வி:- ஜனதிபதி ஆட்சிமுறை வேண்டும். புதிய அரசியல் நிர்ணய சபை அமைக்கப்படவேண்டும் என்று ஆந்திர முதல்வர் கூறியுள்ளார். அது பற்றி உங்கள் கருத்து என்ன?

முதல்வர்: அவர் சொல்லும்ஜனதிபதி ஆட்சி முறைஅமெரிக்கமுறையா? வேறு முறையா என்று

(2-ம் பக்கம் பார்க்க).

## கழகச் செய்திகள்

### மயிலை

15-6-80 ஞாயிறு காலை 10 மணிக்கு சிதம்பரசாமி 3வது தெருவில் கே, ராஜேந்திரன் தலைமையில் கொடியேற்றுவிழா.

பங்கேற்போர்: டி கே கபாலி எம் எல் ஏ, ஜெபாலன், மு கிருஷ்ணன், மு ராஜேந்திரன், நரசிம்மன், சின்னபொண்ணு மனோகரன், சந்திரசேகர், சுப்பிரமணி மற்றும்பலர்.

### பூங்காநகர

54-வது வட்டம் ராசப்ப செட்டித்தெரு (வில் கந்தசாமி கோயில் அருகில்) 14-6-80 மாலை 6 மணிக்கு கழகப் பொதுக் கூட்டம் தலைமை: பூங்கா நாகராஜன், முன்னிலை பி கே கேசவன், பேசுவோர்: அடியார், இராதுரைராசன், சச்சிதானந்தம்ஆகியோர் பேசுவார்கள்

### கொண்டித்தோப்பு

உலகம் போற்றும் உத்தமர் எம் ஜி ஆர் மன்றம் கூட்டம் 15-6-80 மாலை 7மணிக்கு ரங்கப்பிள்ளைத் தோட்டத்தெரு(கொண்டித் தோப்பு) ஆர்.சாமிநாதன் தலைமையில் தேங்காய்சீனிவாசன், புலவர் இந்திர குமாரி ஜே டி சி பிரபாகரன் எம் எல் ஏ ஏ வி கிருஷ்ணமூர்த்தி ஏ பாலசுந்தரம், எம் பிஆனந்தன் எஸ் தட்சிணமூர்த்தி எம் வி இராமன் சி சோசுந்தரம்ஆகியோர் பேசுவர்

# தஞ்சையில்நன்றியறிவிப்புகூட்டம்

## அமைச்சர் எஸ். டி. எஸ் பங்கேற்பு

சென்னை, ஜூன் 14- தஞ்சையில் நாளை (15-ந் தேதி) மாலை நடைபெறும் தஞ்சை மாவட்ட வாக்காளர்களுக்கு நன்றி அறிவிப்பு பொதுக்கூட்டத்தில் வருவாய்த்துறை அமைச்சர் எஸ் டி எஸ். பங்கேற்கிறர்.

தமிழக வருவாய்த்துறை அமைச்சர் எஸ் டி எஸ்சின் சுற்றுப்பயண நிகழ்ச்சிகள், விவரம் வருமாறு:

14-ந்தேதிஇரவு தஞ்சை புறப்படுதல். 15-ந்தேதி காலை தஞ்சை சேருதல், காலை 11 மணி வருவாய்த்துறை அதிகாரிகளுடன் கலந்துரையாடல். காலை 12 மணி வணிக வரித் துறை அதிகாரிகளுடன் கலந்துரையாடல். இரவு 7 மணி தஞ்சை மாவட்ட வாக்காள பெருமக்களுக்கு நன்றியறிவிப்புக் கூட்டத்தில் பங்கேற்பு

16-ந் தேதி காலை 8மணி பட்டுக்கோட்டை புறப்படுதல், மதுக்கூர் ஒன்றிய வாக்காளமக்களுக்குநன்றி தெரிவித்தல். 17-ந் தேதி காலை பட்டுக்கோட்டை ஒன்றிய வாக்காள மக்களுக்கு நன்றி தெரிவித்தல்.

மேற்கண்ட நிகழ்ச்சிகளில் அமைச்சர் எஸ் டி. எஸ் பங்கேற்றுவிட்டு, 18-ந்தேதி காலை சென்னை திரும்புகிறர்.

# அண்ணு தமிழ் இலக்கியக் கழகம் தலைமைப் புரவலர்க் குழு செயலாளர் நியமனம்

அண்ணு தமிழ் இலக்கியக் கழகத்தின் தலைமைப் புரவலர்க் குழுச் செயலாளராக பாவலர் மணி டாக்டர் கே. எம். ஏ. வகாப் அவர்கள் நியமிக்கப்பட்டுள்ளார் என்பதை இலக்கிய அணித் தோழர்களுக்குத்தெரிவித்துக் கொள்கிறேன்

இரா. நெடுஞ்செழியன்,
தலைவர்,
அண்ணு தமிழ் இலக்கியக் கழகம்,
தலைமை புரவலர்க் குழு.

சந்தா விவரம்

1 வருட சந்தா தொகை ரூ. 130
6 மாதச் சந்தா தொகை ரூ. 65
3 மாதச் சந்தா தொகை ரூ. 32-50

3 மாதத்திற்குக் குறைவான சந்தாத் தொகை ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது

நிர்வாகி :
"அண்ணா"
275, அவ்வை சண்முகம் சாலை, சென்னை-600 014.


# அண்ணா



## நன்றி அறிவிப்பு பொதுக்கூட்டம்

### தஞ்சைமாவட்டவாக்காளர்களுக்கு

இடம்: திலகர் திடல் (தஞ்சை)
தேதி:
15 6-1980 மாலை 6 மணி
தலைவர்: துரை. கோவிந்தராசன்

பேசுவோர்:

அமைச்சர்
எஸ். டி எஸ்.,
பி. ராமமூர்த்தி,
ப. சௌந்தரபாண்டியன்,

அமைச்சர்
கோமதிசீனிவாசன்,
எம். கல்யாண சுந்தரம்,

எஸ். ஆர். ராதா,
என். எஸ். இளங்கோ,
அழகு. திருநாவுக்கரசு,
வீரையன் (மார்க்சிஸ்ட்),
சுப்பையன் (கா.கா.தே.கா.)
கதாதரன்,
அம்பிகாபதி M.L.A.,
கலையரசன் M.L.A.,
வெண்ணூர் வீராச்சாமி M.L.A.,
உத்ராபதி M.L.A.,
விஜயபாலன் M.L.A.,

குழ. செல்லையா,
திருவாரூர் தென்கோவன்,
ராமலிங்கம் (இந்தியகம்யூ)
தஞ்சை ராமமூர்த்தி (கா.கா.தே.கா.)
தஞ்சை சாமிநாதன்
உமாநாத் M.L.A.,
பாலசுப்ரமணியம் M.L.A.,
சுப்பிரமணியம் M.L.A.
கோவேந்தன் M.L.A.,
M. S மாணிக்கம் M.L.A.,
திருவாரூர் செல்லமுத்து M.L.A.

மற்றும் பலர்
நன்றியுரை : கோ. வி. நாராயணசாமி
ஜனநாயக முற்போக்குக் கூட்டணி
தஞ்சை மாவட்டம்

## புரட்சிதலைவர் ஆட்சியில் 1 கிலோ அரிசி விலை ரூ. 2

சென்னை, ஜூன் 14- ஆளுநர் ஆட்சியில் அதிக விலைக்கு விற்ற அரிசி புரட்சித்தலைவர் ஆட்சியில் விலை குறைந்துள்ளது.

தேர்தலுக்கு முன்பு ஒரு கிலோ 2-80க்கு விற்ற பச்சரிசி இப்போது 2-40க்கு விற்கிறது.

புழுங்கல் அரிசி ரூ. 1-90 2 ரூபாய்க்கு விற்கிறது.

தேர்தலுக்கு முன்பு இதே புழுங்கல் அரிசி கிலோ ரூ 2.40க்கு விற்பனையானது.

புரட்சித்தலைவர் ஆட்சிப் பொறுப்பை ஏற்றபின்பு எல்லா ரக அரிசியும் கிலோவுக்கு சராசரியாக 60காசு குறைவாக விற்கப் படுகிறது.

இந்தஅரிசி விலை குறித்து ரிக்ஷா தொழிலாளி ஒருவர் கூறியபோது, தினமும் 6 ரூபாய் சம்பாதிப்பேன், தேர்தலுக்கு முன்பு 2 கிலோ அரிசி வாங்கி சமைப்போம். என்னுடைய 6 பிள்ளைகளுக்கு பற்றாக் குறையாகத்தானிருந்தது. எம். ஜி. ஆர். ஆட்சிக்கு வந்ததும் ரூ 1.90க்கு அரிசி விற்கிறது. இப்போது தினமும் 3 கிலோ அரிசிவாங்கி சமைக்கிறோம். என் குழந்தைகள் வயிறார சாப்பிடுகிறார்கள், மகராஜன் நல்லா இருக்கணும் என்று கூறினார்.

### பாராட்டு

முதல்வர் புரட்சித் தலைவருக்கு திருச்சி கல்லக்குடியைச் சேர்ந்த கே கே சாமி வாழ்த்துக்களையும் பாராட்டுக்களையும் தெரிவித்துள்ளார்

## ஏமாற்றம் யாருக்கு?

முதலமைச்சர் பதவி- யாருக்கு ஏமாற்றம்?
-முரசொலி குட்டித் தலைப்பு

கருணாநிதியை அவரது மருமகன் இப்படிப் போட்டு கேலி பண்ணக் கூடாது!

நானே அடுத்த முதலமைச்சர் என்று கூறித் திரிந்த கருணாநிதியை-

பதவி ஏற்பு தினத்தன்று அணிந்துகொள்ள தங்க கிரீடத்துக்கும், தங்க பல்லக்குக்கும் ஆர்டர் கொடுத்திருந்த கருணாநிதியை-

நானே அடுத்த முதல்வர்என்று வளமாக வசூலித்துச் சுகமாக தேர்தல் செலவு செய்த கருணாநிதியை-

ஏமாற்றம் அடைந்து போய் இருக்கிற கருணாநிதியை-

அவரது மருமகனே கேலி செய்யலாமா?



## அண்ணா தொழிற்சங்க பேரவை அறிவிப்பு

### இணைப்புச்சங்கங்களின் கவனத்திற்கு :

இந்திய தொழிற்சங்க சட்டப்படி பதிவு செய்யப்பட்டுள்ள ஒவ்வொரு தொழிற்சங்கமும் ஆண்டு தோறும் வரவு-செலவு கணக்குகளை தணிக்கைசெய்து தொழிற்சங்க இணைப்பதிவாளருக்கு "இ" படிவம் பூர்த்தி செய்து அனுப்பி வைக்க வேண்டுமென்பதை அறிவீர்கள் அதன்படி பேரவையின் இணைப்புச்சங்கங்கள் 1979ம் ஆண்டுக்கான வரவு செலவு கணக்குகளை தணிக்கை செய்து "இ" படிவத்தைப் பூர்த்தி செய்து தொழிற்சங்க இணைப்பதிவாளருக்கு ஏப்ரல் மாதம் 30ம் தேதிக்குள் அனுப்பி இருப்பீர்கள் என்று நம்புகிறோம். இன்னும் வரவு செலவு கணக்குகள் தணிக்கை செய்து இணைப்பதிவாளருக்கு அனுப்பாமல் கால அவகாசம் பெற்றிருக்கும் சங்கங்களும் உடனடியாக வரவு செலவு கணக்குகளை தணிக்கை செய்து "இ" படிவம் பூர்த்தி செய்து சம்பந்தப்பட்ட தொழிற்சங்க இணைப்பதிவாளருக்கு அனுப்பி வைக்க வேண்டுகிறோம்.

ஒவ்வொரு தொழிற்சங்கமும் தொழிற்சங்க இணைப்பதிவாளருக்கு அனுப்பியுள்ள/அனுப்பப்படுகிற "இ" படிவத்தின் நகல் படிவத்தை உடனடியாக பேரவைக்கு அனுப்பி வைக்கும்படி கேட்டுக்கொள்கிறோம்.

"இ" படிவ நகல் அடிப்படையிலும் பேரவை இணைப்புக் கட்டணம் செலுத்தியிருப்பதன் அடிப்படையிலும்தான் பேரவை பொதுக்குழு உறுப்பினர்கள் அங்கீகரிக்கப்படுவார்கள் என்பதையும் தெரிவித்துக்கொள்கிறோம்.

வை. பெருமாள்,
பொதுச்செயலாளர்,
அண்ணா தொழிற்சங்க பேரவை.

## புரட்சித் தலைவருக்கு வணிக வரி அலுவலர்கள் பாராட்டு

சென்னை, ஜூன் 14- முதல்வர் புரட்சித் தலைவருக்கும், அமைச்சர்களுக்கும் தமிழ்நாடு பதிவுபெற்ற வணிக வரித்துறை அலுவலர் சங்கத்தினர் வாழ்த்துக்களையும் பாராட்டுக்களையும் தெரிவித்துள்ளனர்

பல ஆண்டுகளாக நாங்கள் விடுத்த கோரிக்கைகள் கவனிப்பாரின்றி இருந்த நிலையினை மாற்றி கடந்த இரண்டரை ஆண்டு காலத்தில் எங்கள் சங்கத்தின் நியாயமான கோரிக்கைகளை ஏற்று வணிக வரித்துறையில் பல நற்பணிகளைச் செய்த முதல்வர் புரட்சித்தலைவருக்கும வருவாய்த்துறை அமைச்சர் எஸ் டி எஸ் ஆகியோருக்கும் எங்கள் சங்கத்தின் சார்பில் நன்றியையும், வாழ்த்துக்களையும், பாராட்டுக்களையும் தெரிவித்துக் கொள்கிறோம் என்று சங்கத்தலைவர் தி ந தங்கவேலு, பொதுச் செயலாளர் இரா முத்துசாமி கூறியுள்ளார்

திருவல்லிக்கேணி அயோத்தியா குப்பத்தில்

# தி. மு. க. அராஜகம் : வீடு புகுந்து கொள்ளை பெண்களை தாக்கி ரகளை

சென்னை, ஜூன் 14- திருவல்லிக்கேணி அயோத்தியா குப்பத்தில் தி.மு.க காலிகள் வெறியாட்டம் நடத்தினர்கள் வீடு புகுந்து கொள்ளை அடித்தனர். பெண்களைமானபங்கப் படுத்தி கொடுமை செய்தனர்.

12-6-80 அன்று மாலை 7-00 மணிக்கு சென்னை திருவல்லிக்கேணி அயோத்தியா குப்பத்தில் தி. மு. க. காலிகள் தோற்றுவிட்ட வெறியால், அனைத்திந்திய அண்ணா தி. மு. க. தோழர்களை காட்டுத்தனமாக தாக்கியிருக்கிறார்கள். கழகத் தோழர்கள் வீடுகளில் புகுந்து துணிகள்-பணங்கள் - நகைகள் - அத்தனையும் திருடி இருக்கிறார்கள், வீடுகளையும் கொளுத்தி இருக்கிறார்கள். கதவு, ஜன்னல்கள் எரிந்து கிடக்கின்றன, தோழர் கட்டை முனுசாமி, பாவாடை, ராஜேந்திரன் ஆகியோர்களைபயங்கர ஆயுதங்கள்கொண்டு தாக்கி இருக்கிறார்கள்.

எம் ஜி ஆர் மன்ற செயலாளர் ப. பெருமாள் வீட்டைத் தாக்கி உள்ளே இருந்த படங்களை உடைத்துள்ளனர், தேவகி என்ற பெண்ணின் நகைகளைத் திருடியதுடன் அவரது மகள் விஜயாவையும் புடவைஜாக்கெட்டைக் கிழித்து கொடுமைப் படுத்தியுள்ளனர்ரேடியோ மற்றும் பாத்திரங்களை உடைத்துள்ளனர்.

பக்கத்திலுள்ள கடையில் கலாட்டா செய்து ஆயிரம்ரூபாய் மதிப்புள்ள பொருள்களையும்பணத்தையும் கொள்ளை அடித்துள்ளனர். காளியம்மாள் என்பவரை திமுகவினர் அடித்துதுரத்திவிட்டனர்.

ஊரில் வந்தால் வெட்டி விடுவோம் என்று இரவு முழுவதும்சுற்றிக்கொண்டு இருக்கிறார்கள். கழகத் தோழர்கள் மிகவும் பீதி அடைந்துகொண்டு வீட்டுக்குப் போகமுடியாமல் பலர் அச்சத்துடன் இருக்கிறார்கள். கலவரம் செய்யும் திமுக குண்டர்கள், சாராயம் விற்பவர்கள்.

குணசேகரன், ஞானமுத்து மூர்த்தி மணி ஆண்டி ராஜேந்திரன்.

இந்த சமூக விரோதிகள் தான், சண்டை வரக்காரணம். இவர்கள் "சாராயம்" விற்றார்கள் இந்தக் காலிகளைப் பற்றி கழகத்தோழர்கள் காவல் நிலையத்தில் புகார் கொடுத்து இருக்கிறார்கள் நேற்று நடந்த சம்பவம் குறித்து காவல்துறை 'டி1' நிலையத்தில் புகார் கொடுக்கப் பட்டுள்ளது, நிலைமைகளை விளக்கி தென்சென்னை மாவட்டச்செயலாளர் ஜெ. பாலன் வட்ட அமைப்பாளர் தே கோ கண்ணன், ஆகியோர் போலீசில் புகார்செய்து உள்ளார்கள். தாக்கப் பட்ட கழகத்தோழர்களுக்கு ஆறுதல் சொல்லி உள்ளனர்.

இதுகுறித்து அயோத்தியா குப்பத்தைச் சேர்ந்த 'நினைத்ததை முடிப்பவன் எம் ஜி ஆர். மன்றம்' 'கலைசிகரம் எம் ஜி ஆர் மன்றத்தின் நிர்வாகிகளும் புகார் கொடுத்து இருக்கிறார்கள்,

### 97-வதுவட்டம்

97-வது வட்டத்தைச் சேர்ந்த எம் ஜி ஆர் மன்ற தலைவர் தாசப்பனின் மாமியார் குப்பம்மாளை திமுகவினர் அடித்து மயங்கியநிலையில் போட்டு விட்டுச் சென்றனர், தொடர்ந்து 4 நாட்களாக அங்கு திமுகவினர் கலாட்டா செய்து வருகிறார்கள்.

மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சர்

## டாக்டர் ஹண்டேவுக்கு பாராட்டு விழா

15 6-80 ஞாயிறு மாலை 6 மணி
துறைமுகம், பிடாரியார் கோவில்தெரு,
தலைமை : எம். அப்துல்ரகீம்
முன்னிலை : ஏ சாதுல்லா, வி. முத்தேலு
வரவேற்புரை: ஆர். பொன்னுசாமி, ஆர். பாஸ்கர்

பாராட்டு பெறுபவர் :
மாணபுமிகு டாக்டர்
எச். வி. ஹண்டே

பாராட்டுவோர் :
டாக்டர் சந்தோஷம், திருவாரூர் தங்கராசு, ஏ பி ஜனார்த்தனம் எம். பி., ஆர் எஸ் முனிரத்தினம் எம். எல் ஏ., கே பி செய்குத்தம்பி, கிள்ளிவளவன், வலம்புரி ஜான், புலவர்இந்திரகுமாரி, இ மதுசூதனன் ஸ்ரீராமன், எஸ் முருகேசன், டாக்டர் வேணுகோபால் ஏ வி கிருஷ்ணமூர்த்தி, ஜியாவுதீன் மற்றும்பலர்.
நன்றியுரை: கே.எஸ் சுந்தரேசன்

பரபரப்புடன் விற்பனையாகிறது. இலக்கிய மேதை ஜெயகாந்தன் எழுதிய "கரு"

விமர்சனப் போட்டி

அன்பு வாசகர்களே!

எழுத்துலக சக்கரவர்த்தி ஜெயகாந்தனின் 'கரு' கதையை படித்து முடித்திருப்பீர்கள். அது பற்றிய உங்கள் விமர்சனத்தை மிகவும் சுருக்கமாக எழுதி அனுப்புங்கள். சிறந்த விமர்சனங்களை ஜெயகாந்தனே தேர்ந்தெடுக்கிறார்.

நயனதாரா

முதல் பரிசு ரூ. 100
2 வது பரிசு ரூ. 50
3 வது பரிசு ரூ. 25

விமர்சனங்களை அனுப்ப வேண்டிய முகவரி:
விமர்சனப் போட்டி
'நயனதாரா'
36, மன்னாரெட்டி தெரு,
சென்னை-17.

அடுத்த ஜூலை இதழில் ராஜேந்திர குமார் எழுதிய "அதற்கு இதுவல்ல வயது" என்ற சுகமான நாவல் இடம் பெறும்.